<u>மரணம் பற்றி சில:</u>

"பிறப்பைப் பற்றியும், வாழ்வைப் பற்றியும் நாம் ஏராளம் தெரிந்துக்கொள்கிறோம். ஆனால் மரணத்தைப் பற்றி எளிதில் தெரிந்துக் கொள்ள முடிவதில்லை."

"நாம் கண்முன்னே நாள்தோறும் மரணத்தைச் சந்திக்கிறோம். ஆயினும், நமக்கு மட்டும் அது இல்லை என்ற நினைப்புடனே அமர்ந்து இருக்கிறோம்."

"மனித சமூகத்தைச் செத்தப் பிணங்கள், சாகும் பிணங்கள் என்று இரண்டு பிரிவுகளாக வர்ணித்திருக்கிறார். செத்த பிணத்தருகே மற்ற சாகும் பிணங்கள் கத்துகின்றன என்கிறார் பட்டினத்தார்."

"பிணத்தைச் சுமக்கும் உயிர்". ஆத்மா உடலை விட்டுப் பிரிந்தபிறகு மனிதன் பிணமாகிறான் என்று சொல்வதில்லை. ஒரு மனிதன் இறந்தான் என்றால், எப்பொழுதுமே பிணத்தைத் தூக்கித் திரிந்து கொண்டிருந்த ஆத்மா "தொப்" பென்று அதை விட்டெறிந்து ஓடிவிட்டது என்று கொள்ள வேண்டும் என்கிறார் மார்க்க ஒளரேலியஸ்."

"மரணம் எல்லா இடங்களிலும் உன்னை எதிர்பார்த்திருக்கிறது; ஆதலால் புத்தி சாதுர்யமாக இரு; எல்லா இடங்களிலும் மரணத்தை எதிர்பார்."

"மரணம் வேட்டையாட விரும்புவது நம்மைத்தான். நாம் நின்றால் அது நம்மை பற்றிக் கொள்ளும், நாம் ஓடினால் அது துரத்தி வந்து எட்டிப் பிடித்துக் கொள்ளும்."

"ஒவ்வொரு மணி நேரத்திலும் நெருங்கிக் கொண்டே வரும் ஒரு வாழ்வில் நீ எப்படி இன்பமடைய முடியும்".

"மனிதனுடைய ஒவ்வொரு மூச்சும் மரணத்திற்குச் சமீபமாக ஓர் அடி எடுத்துவைப்பதாகும்." "நீ வாழும் போதே மரிக்கிறாய்."

"என்னைப் பயமுறுத்துவது மரணம் அன்று மரிப்பது தான். என்று மான்டெயின் கூறுகிறார்

"நமது அன்புக்குப் பாத்திரமான ஓர் உயிரின் மீது மரணம் கைவைக்கும் பொழுதுதான் முதல் முதலாக நாம் அதை உணர்கிறோம்".

"பிறப்பதை போலவே இறப்பதும் மனிதனுக்கு இயற்கையான ஒன்றாகும்; ஆனால் சிறு குழந்தைக்கு ஒருவேளை இரண்டுமே துயரமாக இருக்கலாம் என்கிறார் பேக்கன்.

"வயது வந்தவர் இறப்பதற்கும் இளைஞர் இறப்பதற்கும் பேதமுண்டு. முதியோர் மரணத்திடம் செல்கின்றனர். மரணம் இளைஞரிடம் வருகிறது."

"மரணம் வாழ்வின் முடிவல்ல; நித்தியமான வாழ்வுக்கு ஒரு வழி. மரிக்காமல் இருக்கவே மறுக்கிறோம். மரணம் நிச்சயமானது; மிகவும் அவசியமானது; உலகமுழுதும் சகஜமாக இருப்பது. இப்படி உள்ளதை மனித சமூகத்திற்குத் தீமையாக இறைவன் ஏற்படுத்தி இருக்க முடியாது, என்றார் ஜோனதன் ஸ்விப்ட்.

"மரணம் அமரத்துவம் என்ற அரண்மனையைத் திறக்கும் திறவுகோல் என்றார். மில்டன்.

"நான் இறக்கிறேனா, அல்லது இல்லாமல் போகிறேனா என்பதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஏனென்றால், நான் இறந்தால் ஆண்டவனுடன் இருப்பேன்; நான் வாழ்ந்தால் அவர் என்னுடன் இருப்பார்" என்றார் புரோடாக் என்ற ஞானி.

"வாழ்வு என்பது வாழ்வதற்குரிய ஆயத்தம்தான். அது வாத்து முட்டையைப் போன்றது. ஒருவன் மரணப் படுக்கையில் இல்லாமல் பூரணமாகப் பிறக்கிறான் என்று சொல்வதற்கில்லை. பிறப்பொடு மரணம் சேர்ந்தால் தான் பூரணமான பிறப்பாகும்". பிராங்க்லின்.

"மரணம் உலகில் மிகச் சிறந்த அபேதவாதி. வாழ்வில் தான் பேதங்கள் இருக்கின்றன. மரணத்தில் சமத்துவம் இருக்கிறது. யாராக இருந்தாலும் இறக்கும்போது மனிதனாய்த் தான் இறக்கிறான்.

"நாம் வாழ்வதில்லை என்று சொல்லலாம். "நாம் வாழ்வதே இல்லை; வாழ வேண்டும் என்று எதிர்பார்க்கத்தான் செய்கிறோம். வாழ்வின் ஆரம்பத்திலேயே நாம் வாழ்ந்து விடுகிறோம். எப்படி வாழ வேண்டும் என்பதை நாம் தெரிந்துக் கொள்கிறோம். தெரிந்துக் கொண்டபடி நடக்க ஆரம்பிக்கும் போது மெய்யும் மரணம் வந்து விடுகின்றது." என்று வால்டேர்: